உ
அன்பே சிவம்

# மயிலை முருகன் காவடிச் சிந்து

இயற்றியவர்:
பைந்தமிழ்ப் பாவலவர், புலவர்ஏறு, மணிதீபம்,
சிவகதாப்ரசனகச் சக்கரவர்த்தி,
**கே. ஆர். நாகராஜன்**

சிவஞான பூஜா மலர் துன்மதி ஆண்டு - (1981)
பிரசுரம்: **ஆங்கீரஸ s. வேங்கடேச சர்மா**, மேலமாம்பலம், சென்னை - 600 033]

## காப்பு

திருவார் மயிலைநகர் வாழும் - உயர்
தெய்வக் கபாலி அருள் சூழும் - தமிழ்
ஓசை முழங்க, நடம் ஆசையுடனே செய்யும்
யானை - பருகும், தமிழ்த் - தேனை!

## நூல்

தெள்ளு தமிழ் விரும்பும் சீலன் - தமிழ்
நாகன் எனும் பெயர்கொள் நூலன் - உயர்
மயிலை நகரில் வளர் முருகன் திருப்புகழைச்
சொல்வேன்! அனைவரையும் - வெல்வேன்! 1

ஓசைக் கடல் முழுங்கும் முன்றில் - தினம்
உண்மை அடியவர்கள் மன்றில் - உனைப்
பாடிப் பரவிடுவார்! ஆடி மகிழ்ந்திடுவார்!
முருகா! திருமால் - மருகா! 2

அழகு மயிலதன் மேல் ஏறி - இரு
அழகியர் அன்பதனைக் கோரிக் - கையில்
வேலை எடுத்துவிளை யாடிவரும் முருகக்
கோனே! தமிழ்த் - தேனே! 3

அற்புத மாமயிலை வாழும் - ஒரு
கற்பக வல்லி மடி வீழும் - நல்ல

சின்னஞ் சிறுமுருகன் என்னெஞ் சுருக்கிடுவான்
நாளும்! எந்த - நாளும்! 4

தந்தை கபாலி உளம் மகிழ - அன்னை
கற்பக வல்லி அன்பு திகழ - வளர்
செல்வத் திருமுருகன் சிந்தை நிறைந்திருப்பான்
என்றும்! - தினம் - நன்றும்! 5

தொந்தி கரைத்திடவே அண்ணன் - தினம்
தொந்தோம் என்றாடிடுவான் திண்ணம்! - அவன்
தம்பி திருமுருகன் நம்பியவர்க் கருளும்
அன்பன்! - தமிழ்ப் - பண்பன்! 6

மயிலை ஊர்திஎனக் கொண்டான்! - திரு
மயிலைத் தன்ஊர் எனவே கண்டான்! - இரு
மயிலை மணந்தவனும் அயிலை எடுத்து, தினம்
வருவான்! - இன்பம் - தருவான்! 7

செக்கச் சிவந்திருப்பான் மேனி! அவன்
செய்ய அடிமலரின் தேனைத் - தினம்
வந்தே குடித்து மகிழ் செந்தேன் கலிபொழியும்
தேனீ! தான் தமிழ்த் - தேனீ! 8

வள்ளல் பெருங்கருணை வேலன்! அவன்
வந்தவர்க் கெல்லாம் அருளும் சீவன்! - என்றன்
உள்ளமெனும் தாமரையில் அள்ளும் அழகுடனே
இருப்பான்! தினம் - சிரிப்பான்! 9

புன்னை மரத்தின் அடிமேடை - அது
பெம்மான் அருள் பெருகும் ஓடை - அங்கு
அன்னை தவம் புரிவான்! அழகன் அருள் புரிவான்!
தினமும்! - மகிழும் என் - மனமும்! 10

## மயிலை நகரின் சிறப்பு

நீலக் கடல்முழங்கும் நாளும்! - அதன்
நீண்ட கரையினில் செவ் வேளும் - தினம்
வணங்கிடும் அன்பர்தமக் கிணங்கியே இன்னருளைத்
தருவான்! - மயில்மேல் - வருவான்! 11

வள்ளுவனார் வாழ்ந்திருந்த மயிலை - முருக
வள்ளல் உவந் தேறிவரும் மயிலைத் - தினம்
கண்டே நடுக்கமது கொண்டே அரவமெலாம்
ஏங்கும்! சிவன் மேல் - தூங்கும்! 12

எலும்பை அணிந்தவர்தம் முன்னால் - ஐயன்
எலும்பைப் பெண்ணாகச் செய்தார் தன்னால்! - திரு
ஞானசம்பந்தப் பெயர் தானே முறையாய்க் கொண்ட
அன்பர்! - தமிழ்ப் - பண்பர்! 13

செல்வம் சிறந்தோங்கும் மயிலை - கல்விச்
செல்வம் உயர்ந்தோங்கும் மயிலை - உயர்
விண்ணை முட்டும் மாளிகைகள் கண்ணைக்கவர் காட்சி தரும்
அன்றும்! - முறையாய் - இன்றும்! 14

தந்தை கபாலி அருள்புரிவான்! உயர்
தாயாரும் முந்தி அருள் புரிவான்! - உயர்
தொந்தி கணபதியும், கந்தக் குணபதியும்
வருவார்! - அருள் - தருவார்! 15

பண்டை நாள் பல்லவர்கள் காலம்! - மயிலை
பாரில் சிறந்திருந்த கோலம்! - பல
மேலைப் புலத்திருந்தும், கீழைப் புலத்திருந்தும் - கலம்கள்
வருமே! செல்வம் - தருமே! 16

வாயிலார் எனும்பெயர்கொள் அன்பர்! - அவர்
வள்ளல் கபாலியிடம் அன்பர்! - அவர்
தோன்றியநற் காரணத்தால் ஆன்றபுகழ் பெற்றதுநல்
மயிலை! - சீர் - மயிலை! 17

அழகு மயில்வடிவம் கொண்டே - உமை
அம்மை, இறைவர்உருக் கண்டே - முன்னாள்
புன்னை மரத்தடியில் அன்னை வணங்கியசீர்
மயிலை! - உயர் - மயிலை! 18

நாயன்மார் அறுபத்துமூவர்! - அவர்க்கே
அவனியில் நிகர் உளார் யாவர்? - அவர்தாம்
ஆண்டுதோறும் தெருவில் யாண்டும் உலாவகுவார்
அன்றும்! - இனி - என்றும்! 19

அன்னை அறம் புரியும் மயிலை! - எங்கள்

அப்பன் அருள் புரியும் மயிலை! - உயர்
முருகப் பெருமான் சக்தி வேலை தாய் தன்னிடமே
பெற்றான்! - பகையைச் - செற்றான்! 20

## முருகவேள் மாண்பு

ஆறு தலையுடைய அழகன்! - அன்பர்க்
காறுதலை வழங்கும் குழகன்! - அவன்
பன்னிரு கையதனால் பகையை ஒழித்திடுவான்
வேலன்! - சிவ - பாலன்! 21

கற்பக வல்லி மகிழ் வேலன்! - கல்வி
கற்றவர் உளத்துறையும் பாலன்! - இரு
பாவையர்களை மணந்து, பரிவுடன் அருள்செய்யும்
வீரன்! மயிலை - ஊரன்! 22

சிவனார் மனம் மகிழும் கந்தன்! - செல்வ
மயிலை நகரில் வளர் மைந்தான்! - என்றும்
நல்லவரைக் காத்திடுவான்! அல்லவரைத் தேய்த்திடுவான்!
அமரன்! - தெய்வக் - குமரன்! 23

விண்ணைத் தொட உயரும் கோயில்! - அதில்
கண்ணைக் கவரும் உயர் வாயில்! உள்ளே
அழகு குடியிருக்கும் அன்பன் முகத்தில் - நகை
இலகும்! - பகை - விலகும்! 24

பச்சை மயிலின் மிசை வருவான்! இரு
பாவையர் சூழ அருள் தருவான்! - சக்தி
வேலை வலக்கரத்தில் ஏந்திப் பகைவன் உயிர்
கொல்வான்! - என்றும் - வெல்வான்! 25

புன்னை மரங்கள் நிறை சோலை! - அதன்
முன்னை முழங்கும் கடல் வேலை! - அந்தப்
புன்னை மரநிழலில் அன்னை அறுமுகனைக்
கண்டாள்! - உவகை - கொண்டாள்! 26

அற்புதக் கபாலி உருக்கண்டு - அன்னை
கற்பகம் மனத்தில் மகிழ் கொண்டு - முன்னர்
பொற்புறப் பணிந்துதினம் போற்றியதால் வந்தபெயர்
மயிலை! - நகர் - மயிலை! 27

வேலை வலக் கரத்தில் ஏந்தித் - தினம்
விரும்பித் தமிழமுதம் மாந்தி - மகிழ்
வள்ளி, தெய்வ யானையுடன் உளத்தில் மகிழ்வுடனே
வருவான்! - வரங்கள் - தருவான்! 28

புள்ளிமயில் ஏறிவரும் பாலன்! - அவன்
வள்ளிக் குறமகளின் லோலன்! - முன்பு
சூரன் உயிர் குடித்துச் சுற்றும் பகைமுடித்த
குமரன்! - அவன் - அமரன்! 29

தமிழ்க்கவித் தேன்உண்ணும் தேனீ! - தமிழ்
நாகன் முன் காட்சிதரவாநீ! - மயிலை
நகரில் வதியும் குமரேசப் பெருமான் புகழ்
பாடு! - மனம் - நாடு! 30

குமரன் பதமலரைப் பாடி - இரு
குமரியர் அடிமலர் நாடித் - தினம்
திமிரக் கடல் மயிலைக் குமரன் அருளால் ஞாலம்
வாழ்க! - இன்பம் - சூழ்க. 31

கற்பகவல்லி புகழ் வாழ்க! - உயர்
கபாலி பதமலர்கள் வாழ்க! - உயர்
அற்புதக் குமர வடிவேலன் இரு அன்னையுடன்
வாழ்க! - தினம் - வாழ்க! 32